நாட்டுப்புறவியல்

# உலகம் குழந்தையாக இருந்தபோது

இந்திய மலைகளிலும் காடுகளிலுமிருந்து சில நாட்டுப்புறக் கதைகள்


வெரியர் எல்வின்

தமிழில்
பிரிஜிட்டா ஜெயசீலன்

சித்திரங்கள்
அமினா ஜெயல்

முன்னுரை
ராமச்சந்திர குஹா






நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

# முன்னுரை

உலகம் குழந்தையாக இருந்தபோது எனும் இந்நூலில் இந்தியப் பழங்குடியினரின் பலவகையான பழங்கதைகள் தொகுக்கப் பட்டுள்ளன. சிந்தனையைத் தூண்டும் இக்கதைகள் வெறும் வரண்ட அறிவியல் விளக்கங்கள் அல்ல. பல அறிவியல் உண்மைகள் விரு விருப்பாக, சுவாரசியமாக இக்கதைகளில எடுத்தாளப்பட்டுள்ளன. சில கதைகள் உலக உதயம் பற்றியும், முதல் நதியின் நீர்ப்போக்கு பற்றியும், பூகம்ப உதயம பற்றியும் எடுத்துச் சொல்லுகின்றன. இன்னும் சில கதைகள ஆதி மனிதன் பேசவும், பார்க்கவும் துவங்கிய விதத்தைப் பற்றியும் கூறுகின்றன. வேறு சில கதைகள், மனிதனும், விலங்கினமும் கொண்ட, நேயமானதும், நேயமற்றதுமான தொடர்பினை விளக்கு கின்றன. இக்கதைகள் மூலம் தவளைகளுக்கு மெலிந்த கால்கள் எப்படி வந்தன என்பதும், யானைகள் தம் சிறகுகளை எப்படித் தொலைத்தன என்பதும தெரியப்பெறுகிறோம.

இநதக் கதைகள் பலவகைப் பழங்குடியினரின் கதைகள் ஆனதால், உணர்த்தும் கருத்துக்களும் பலதரப்பட்டவை. பைகா பழங்குடியினர் மத்திய இந்தியாவில் வசிக்க, மின்யாங் பழங்குடியினரோ, அருணாசலப் பிரதேசத்திலுள்ள சியாங் நதிக்கரையில வாழ்கின்றனர். இங்ஙனம் பல இடங்களில் பிரிந்து வாழும இப்பழங்குடியினரின் வாழ்வு முறைகளின் வித்தியாசம் இவர்தம் கதைகளில் திறம்படத் தெரிகிறது.

1902-ஆம் ஆண்டு பிறந்த வெரியர் எல்வின, இந்நூற்றாண்டின் சிறந்த மானுடவியலாளர். புகழ்பெற்ற ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் பயின்ற இவர், 1927-ல் முதன்முறையாக இந்தியாவிற்கு வந்தார். மகாத்மா காந்தியின் கொள்கைகளால் ஈர்க்கப்பட்டு, ஆங்கிலேய ராக இருந்துமகூட, ஆங்கில ஏகாதிபத்தியத்திற்கு எதிராகக் குரல் கொடுத்தார். 1932-ல், தன் மனைவியான ஷேம்ரோ ஹிவேலுடன், மத்தியப் பிரதேசத்தின் மாண்டலா மாகாணத்திலுள்ள கோண்டர் களின் கிராமம் ஒன்றில் குடியேறினார். இங்கே இவருடைய இரு நண்பர்கள் உருவாக்கிய கோண்டர்கள் சேவா மண்டலம் எனும் பழங்குடியினர் நல மையம் ஒன்று ஏற்கெனவே இயங்கி வந்தது. இது பழங்குடியினரின் நவீன, கல்வி மற்றும் மருத்துவ வசதிகளுக்காக

ஏற்படுத்தப்பட்டது. ஷேம்ரோ ஹிவேல், இந்த மையத்துக்குச் சொந்தமான பள்ளிகளையும், மருத்துவ மனைகளையும் மேற்பார்வை யிட்டு உதவினார். எல்வின், தற்போதைய மத்தியப் பிரதேசம், ஒரிஸா, மஹாராஷ்டிரா, பீஹார் ஆகிய மாநிலங்களில், பழங்குடியினரிடையே நெருங்கிப் பழகினார். 1936-ல் வெளியிட்ட கானகத்து இலைகள் (Leaves from the Jungle) எனும் தனது நூலில் பழங்குடியினருடன் நிகழ்ந்த தம் முதல் சந்திப்புக்களை கூறுகின்றார். பழங்குடியினரின் வாழ்வு முறைகளும், கலாச்சாரங்களும் தம்மை மிகவும கவர்ந்ததாகவும், அதனால்தான் அவர்களுடைய பழங் கதைகளைத் திரட்டி மொழி பெயர்த்ததாகவும் இந்நூலில் விளக்கமாகக் கூறுகிறார்.

சீரிய முயற்சி மேற்கொண்டு, இன்னும்பல நூல்களில் பல்வகைப் பழங்குடியினரைப் பற்றி எழுதினார். 25 மில்லியன் மத்திய இந்திய ஆதிவாசிகள் தம் உரிமைகளையும், கலாச்சாரப் பெருமையினையும் இழந்து வாழும் அவலத்தால் உலுக்கப்பட்டு, அவர்களுக்காக, அவர் களில் ஒருவராக இருந்து எழுதினார். எல்வினுடைய நூல்கள், சிறு கட்டுரைகள், சொற்பொழிவுகள், புகைப்படங்கள் மற்றும் திரைப்படங்கள் மூலம்தான், நகர்வாழ் இந்தியர்கள் தம் சம காலத்துப் பழங்குடியினரின் வாழ்க்கைச் சிக்கல்களைப் புரிந்து கொண்டனர்.

ஆகஸ்ட் 1947-ல் இந்தியா சுதந்திரமடைந்த போது எல்வின், முழு இந்தியக் குடிமகனாகச் சட்ட உரிமை பெற்றார். இது இவரது நெடு நாளைய அவாவும் கூட! தன் எழுத்தின் மூலம் இதற்குள் பல ஆதர வாளர்களைச் சம்பாதித்துக் கொண்டார் இந்திய முன்னாள் பிரதமர் ஜவஹர்லால் நேருவும் இவ்வாதரவாளர்களுள் ஒருவர் ஆவார். நேருஜியின் பரிந்துரையில், எல்வின் வடகிழக்கு எல்லைப் பிராநதிய (தற்போதைய அருணாசலப் பிரதேசம்) அரசு நியமித்த பழஙகுடியினர் அமைப்பின் ஆலோசகராக நியமனம் ஆனார் யாரும் அறிந்துணராத, அணுக முடியாத இந்தியப் பகுதிகளில், எல்வினின் வேலை, பழங்குடி யினரின் வாழ்விலிருந்த பிரச்சினைகளை அறிந்து, அரசுக்கு அவை சம்பந்தமாக ஆலோசனை வழங்குவதே ஆகும். இக்காலக் கட்டத்திலும், ஆதிவாசிகளின் அடிப்படை உரிமைகளைப் பெற்றுத்தர ஆர்வம் காட்டினார். ஆதிவாசிகளுக்கு இவர் புரிநத சேவைகளுக்காகவும, இநதிய மானுடவியலுக்கு இவர் ஆற்றிய பணிகளுககாகவும 1961-ல் இவருக்கு பத்ம பூஷண் விருது வழங்கப்பட்டது. 1964-பிப்ரவரியில் எல்வின் தான் சுவீகரித்துக் கொண்ட இந்திய மண்ணிலேயே உயிர் துறநதார்.

எல்வினின் வாழ்வும, சேவையும், வெரியர் எல்வின் கண்ட பழங்குடியினரின் உலகம் (The raibal world of Verrier Elwin) எனும் அவரது சுயசரிதத்தில் தெளிவாகத் தெரிகிறது. இநநூல இவர் இறக்குமுன்னரே எழுதி முடிககப்படடிருந்தாலும, இறந்த பின்னர்தான அச்சாகியது. இந்த நூலும், கானகத்து இலைகள் எனும நூலும்,

தற்சமயத்தில் மறுபதிபபாகியது மககளிடையே இவவிரு நூலகளுக்கும நல்ல வரவேற்பு உள்ளது.

எலவின ஒரு கொள்கைவீரா, சமூக ஊழியா, மானுடவியலாளர்; அரசு ஊழியர் இவை அனைததுக்கும மேலாக 25 நூலகள் எழுதிய நூலாசிரியருமகூட! மானுடவியல முதல் புதினங்கள் வரை, வரலாறறுப புத்தகஙகள முதல சுயசரிதைவரை பலவகைப் புத்தகஙகளை இவா எழுதியுள்ளார். 5 பெரிய பழங்குடியினர் - புராதனக் கதைத தொகுபபுகள் எழுதி உளளார் இவைகளிலிருநதுதான் இநத நூலுககு வேணடிய கதைகள திரட்டப்பட்டன. இந்தத் தொகுபபு இவர் எழுதிய பிற நூலகளைப் போலவே, இவர்தம் மனித நேயததிறகும, கதைசொலலும திறனுககும் சானறு பகர்கிறது 1961-ல முதலில் வெளியான இநதத தொகுபபு 1966-ல் மீண்டும் மறுபதிபபானது மீணடும் இப்போது புதிய தலைமுறை வாசகர்களுககாக பதிப்பாகிறது.

**1995** — ராமச்சந்திர குஹா

# உள்ளடக்கம்

*மாயாஜால உலகில் விநோத அனுபவங்கள்*



*அனைத்தின் முடிவு*

# ஆசிரியர் உரை

இந்திய மலைவாழ், காடுவாழ் மக்களிடமிருந்து 30 வருடங்களாகக் கதைகள் பல திரட்டி சுமார் 2000 கதைகளை வெளியிட்டுள்ளேன். இந்தச சிறு புத்தகத்தில் உலகம குழநதையாக இருந்தபோது, அதாவது இபபோதைவிடச் சிறுவயதாக இருநதபோது, எப்படி இருநதிருக்கும என்பது பற்றிய மக்களது கருத்தைப பிரதிபலிககும சில கதைகளைத தருகினறேன. சில கதைகள உலக உதயத்தைப் பறறியும், சில கதைகள் உலக உதயததின போது மனிதாகள வாழ்நத வாழ்க்கையைப் பறறியும விளக்குகினறன சில கதைகள், தீ, வீடு, ஆடை முதலிய மனிதனின் அத்யாவசிய தேவைகளின கணடுபிடிப்புக்கள பற்றியவை; சில கதைகள விநோதமானவை, இவை மனிதனும, மிருகமும ஒனறாய வாழநது, பேசிக் களித்த நாட்களைப பறறிக் கூறுகினறன. மநதிர-தநதிரஙகள தஙகளது இறுககமான பிடியைக் கொணடிருந்த அநநாட்களில் மனிதர்கள அடைநத விநோத அனுபவஙகளைக கூறுகினறன. இறப்பு அக்கால மனிதனுககுப் புரியாத புதிராகவே இருநதது இறபபு முதனமுதலில எப்படி வநதது எனபது பற்றியும அது மனிதனை வருததாமல மாறாக நீணட நாள வாழும தளையிலிருநது அவர்களை விடுவிதது ஆறுதல கூறுவதாக அது அமைநதது பறறியும சில கதைகள கூறுகினறன.

இநதககதைகள் எனனுடைய முநதைய பிற புத்தகங்களிலிருநது எடுக்கபபட்டுளளன. அநதப் புததகஙகள் பினவருமாறு மஹாகோஷலின் கிராமியக கதைகள் (ஆகஸ்போர்டு பல்கலைககழக அச்சகம, 1944), மத்திய இந்தியாவின தொன்மக கதைகள் (ஆகஸபோாடு பல்கலைககழக அசசகம, 1949), ஒரிஸா பழஙகுடியினாின தொனமஙகள (ஆக்ஸ்போாடு பலகலைககழக அச்சகம, 1954), இந்திய வடகிழககு எலலைப் பிராந்தியததின் தொனமக கதைகள (வடகிழககு எல்லைப பிராநதிய எஜெனஸி, 1958), பைகா (ஜான முரே, 1939) மேற்கணட புத்தகங்களின வெளியீட்டாளர்களுக்கு என் உளளங்கனிநத நனறியைச் சமாபபிக்கிறேன.

ஷிலலாங,
டிசம்பர் 1, 1960

— வெரியர் எல்வின்.

# துவக்க காலம்

## உலகம் உருவாகிறது

உலகத்தின் சிருஷ்டி பற்றி இந்தியாவின மலைவாழ, காடுவாழ மககளிடையே பலவேறு அபிப்ராயஙகள பரமபரையாகவே நிலவி வருகினறன. சிலா உலகம ஒரு பெரிய முட்டையிலிருந்து வெளிவநத தாகவும, சிலர் கடவுள தம கைகளினாலேயே உலகததை உருவாககினார் எனவும கூறுகினறனா். அநேகர், துவககததில் ஒரு பெரும சமுததிரம மட்டுமே இருநததாகவும, அதன அடிததளத்திலிருந்து மேல் எழுநது விரிந்து பரவியதே உலகம எனவும நமபுகினறனா். இதுவே அழகிய மததிய இந்தியக காடுகளில வாழும பைகா எனும பழஙகுடியினரின அசைசகக முடியாத நமபிக்கையும ஆகும. இநத நமபிககையை விளகக எழுநத கதைதான இது.

முதலில தணணீர் தவிர வேறு எதுவும உலகில இலலை. கடவுளின வார்ததையோ, ஆவிகளின துலலிய ஒலியோ, காறறோ, பாறையோ, பாதையோ, காடோ எதுவும இலலை. தணணீர் மட்டுமே எஙகும பரந்திருநதது. சிருஷடி கர்த்தாவாம கடவுள தாமரை இலையின மீது அமாநது நீரின் மேல அசைநதாடிக கொணடிருநதாா. அவர் தனியே வாழநதாா. அவாதம தனிமை போக்க அழகிய மலரோ, கனியோ உலகில் இல்லை. ஒருநாள் தன கையிலிருந்து உருட்டி எடுத்த அழுககைப பிடித்து வைததுக காகம ஒனறை உருவாககினார் கடவுள. சிருஷ்டியின முதல் உயிா மகளாம காகம வளாநது பறககும பருவ காலததில கடவுள, "மகளே, நீ போய நான உலகம உருவாக்க மண் கொணடு வா. எதுவுமினறித தனிமையாக இருபபதைக காண விலலையா?" எனறாா.

காகம் பறந்தது. இலககு எஙகே எனறு தெரியாத தொலை தூரததிற்குப பறநது சென்றது. களைப்பு மிகுச, உயிாத்துடிபபு அடஙக, நா வறணடு போய, ஒரு பெரிய ஆமையின மேல போய விழுநதது. அந்த ஆமையோ மிகப பெரிய ஆமை. அதன ஒரு கை வானத்தையும, மறு கை சமுத்திரத்தின அடியையும அளநது நினறது.

ஆமை, "எனனாயிறறு? ஏன இபபடி மேல மூச்சு, கீழ மூசசு



வாங்க நிற்கிறாய்?" என்று கேட்டது. காகமோ, "எனனைத் தாங்கிப் பிடித்த அருமை சகோதரனே! நான் மிகவும் களைத்துவிட்டேன். இதோ என உயிர் மூச்சும் என் உடலை விட்டு நீங்கப் போகிறது" என்றது. ஆமை அன்பு பொங்க, "நீ எங்கே செல்கிறாய், என் செல்லச் சகோதரியே" எனக் கேட்டது. "நான் கடவுள் உலகம் உருவாக்கக் கூடிய மண் கொண்டு வரச் செல்கிறேன். அதனைத் தேடிக் களைத்து விட்டேன மண எங்கே கிடைக்கும்?" எனக் காகம் வினா எழுப்பியது.

ஆமை, "சமுத்திரத்தின் அடியில் வசிக்கும் புழுவைப் போய்க் கேள். மண்ணை விழுங்கிய ஆசாமி அவனேதான. ஆனால் பெண்ணே! சற்றுப் பொறு' புழுவைக் காண சமுத்திரத்தின் அடி வரை போக வேண்டுமே! இதற்கு விசேஷமான இரும்புக் கூண்டு அவசியம் வேண்டும். ஆகவே இப்போது இரும்புக்கு அதிபதியிடம உன்னை கூட்டிச் செல்லப்போகிறேன. இரும்பு அதிபதி உனக்கு நிச்சயம உதவுவார்" என்று கூறியது.

கூறியபடியே இரும்பு அதிபதியிடம் காகத்தைக் கூட்டிச் சென்றது. அவரும் லகாசூர் எலும் இரும்பு வேலை செயயும தம் 12 தமபியரையும, தமேசூர் எனும் தாமிரத்தில் வேலை செயயும் 13 தமபியரையும், அக்யாசூர் எனும் தீயில வேலை செய்யும 14 தம்பியரையும் அழைத்தார். அனைவரும் சோந்து, சன்னலகளுடன் கூடிய பெரிய இரும்புக் கூண்டு ஒன்றைச் செயதனர். ஆமையும, காகமும கூண்டினுள் நுழைந்து கொண்டன. இரும்பு அதிபதி வலுவான இரும்புச் சங்கிலிகளின துணை கொண்டு மெதுவாகக் கூண்டைக கடலினுள் இறக்கினார் இனனொரு சங்கிலியின் ஒரு முனையை அவர்களிடம் கொடுத்து, "உங்கள் வேலை முடிநததும் இந்தச் சங்கிலியை இழுங்கள். நான் உங்களை மேலே இழுததுக் கொள்வேன" என்றார்.

கடலின் அடியில வசித்த புழு தூங்கிக்கொணடிருநதது. இரும்புக் கூடு அதன தலை அருகே நினறது. ஆமையும, காகமும் வெளியே வந்து புழுவை எழுப்பின தூககம் கலைந்து எழுந்த புழுவுக்குக் கோபம வந்தது "நான பன்னிரண்டு வருடஙகளாகத் தூங்கிக் கொண்டிருநதேன. இபபடி எழுப்பிவிட்டாயே' சரி' இவ்வளவு காலமாக உணவே இல்லாமல் உறஙகிக கொணடிருநதேன. இபபோது உங்கள் இருவரையும் உணணப் போகிறேன" எனறு புழு கததியது. அதுகேட்ட ஆமை பயந்து போய், காகத்தின் பின ஒளிநது கொண்டது புழு, "நீ யாருடைய மகள?" எனக் காகத்தைக் கேட்டது. "நான் கடவுளின் மகளாக்கும்" என்றது காகம. "நீ ஏன் இங்கே வநதாய்" எனப்புழு வினா எழுபபியது. "நான மண்ணைத் தேடி வந்தேன" எனறது காகம். "உன் தந்தை இங்கேயா மண்ணை விட்டுச் சென்றார், நீ தேடிக் கண்டு பிடிக்க?" என்று கிண்டல் அடித்தது புழு. காகத்திற்குக் கோபம் வந்தது. தன் பொறுமையை இழந்து, "நீ மண்ணைக் கொடுக்காவிட்டால் உன்னை அடிப்பதைத் தவிர வேறு வழியில்லை" எனறு மிரட்டியது. புழு பயந்து போனது. "நீ தேடி வந்த மண் இங்கே இல்லை பெண்ணே! அது வேறு ஒரு இடத்தில் உள்ளது. ஒரு அரக்கன் அதைக் காவல் காக்கிறான். நீ அவன் அருகே சென்றால் உன்னைச் சாம்பலாக்கி விடுவான்" என்றது. ஆனால் ஆமை அதை நம்பவில்லை. புழுவின் பயத்தை உணர்ந்து கொண்ட ஆமை தன் பயத்தை மறந்தது. துணிச்சலாகக் காகத்தின் பின்னிருந்து வெளி வந்து புழுமேல் ஒரு

குத்துவிட்டது. அதன் கழுத்தை நெருக்கிப் பிடித்தது. "மண்ணைக் கொடு. இல்லாவிடில் உன தலையை வெட்டி விடுவேன்" என்றது. புழுவின் கழுத்தை அழுத்தமாக நெரிக்க ஆரம்பித்தது. புழு நெளிந்து, முறுக்கிப் பாாத்தது. ஆமையின பிடியிலிருநது தப்ப முடியவில்லை. "மகளே, பொறு!" எனக் கூறி வாந்தி எடுத்தது. 21 முறை வாந்தி எடுத்தது ஒவ்வொரு முறையும் கொஞ்சம் மண் கொண்டு வந்தது. வெளி வந்த மண ஒரு சிறிய பெரிப் பழம் அளவே இருநதது. முதல்முறை வாந்தி எடுத்து ஆதாரமான மூல மண் கொணர்ந்தது. 2-ம் முறை மஞ்சள் மண; 3-ம் முறை கருப்பு மண்; 4-ம முறை பாவ மண- "இந்த மணணில் புலி உனனைக் கொலலத்தக்க குணம உண்டு" எனறு எச்சரித்தது. 5-ம் முறை உலர்ந்த மண, 6-ம் முறை அழுக்குமண்; 7-ம் முறை தொடாத மண்; 8-ம் முறை பால் போன்ற வெள்ளை மண்; 9-ம் முறை நல்ல மண்; 10-ம முறை பூமியதிரும் மண, 11-ம் முறை எல்லா வகை மணகளின கலவை; 12-ம முறை சிவப்பு மண், 13-ம் முறை எநதக் கலவையுமறற மண; 14-ம முறை வெள்ளைக் களிமண், 15-ம் முறை பாறை மண்; 16-ம முறை சிவப்புச் சரளைக் கல் மண; 17-ம முறை மணல, 18-ம் முறை தாது உப்புக்கலந்த மண, 19-ம் முறை விளைச்சல தரும வளமான மண்; 20-ம முறை எதுவும வளராத வளமற்ற மண, 21-ம் முறை பயிரிடப்படாத இளம் மண. இவ்வாறு பல்வகை மண் வெளி வநதது.

புழு எலலா வகை மண்ணையும தந்தபின ஆமை சங்கிலியை இழுத்தது இருமபு அதிபதி மேலே கூணடை இழுத்தார். ஆமை மணணைக காகத்தின் கழுத்தில் ஒரு கயிறு கொணடுக் கட்டி அனுப்பியது காகம் மண்ணுடன் பறந்தது. வெகுதூரம் பறநத காக்கை களைபபு மிகுதியால் இறககும நிலைக்கே வநது விட்டது. காகத்தைப் பாாத்ததும "மண் கொணடு வந்து விட்டாயா என் மகளே?" எனக கடவுள் கேட்டார். "ஆம தந்தையே! கொணடு வநது விட்டேன." எனறது காக்கை. கடவுள் காககையின கழுததில் தொஙகிய மண்ணை எடுத்துத் தன் மடியில இட்டுக்கொணடார் ஒரு இளம் கன்னியை அழைத்து இலையால் ஆன ஒரு பாததிரம் செயது தரச் சொனனார். அதில் மண்ணைப் போட, கன்னி கடைநதாள. 8 பகலும, 9 இரவுமாகக் கடைந்தாள். இறுதியாகக் கடைந்ததை ரொட்டி போல உருட்டி எடுத்துத் தண்ணீர் மேல் மிதககச் செயதார். அங்கே மண் உருணடை வளர்ந்து உலகமாக உருவானது.

ஆனால் மண் உருணடை திடமாக இல்லை. அதன் மேல நிற்க முனைந்தபோது அது வழுக்கிச் செனறது. மழைக்காலச் சேறு போல இறுகாமல் இருநதது. அதனை இறுகச் செய்ய பவானதேசாரியையும, பீமசேனனையும் அழைத்துவரக் காக்கையை அனுப்பினார் கடவுள். காற்றுக் கடவுளாம் பவான் தேசாரி விரைந்து வந்தார். உலக

உருண்டையின் மீது ஊதினார். இறுகாத மண் பறந்தது. சேர்த்து வைத்துக் குழப்பினார். திரும்பவும் ஊதிக் கெட்டியாக்கினார். ஆனால் காற்றுக்குக் கண் கிடையாதே! அதனால்தானே கண்டபடி பொருள் களையும், மனிதர்களையும் வீசித் தள்ளுகிறது! ஆகவே காற்றின் வேலையில் திருத்தம் இல்லை. உலக உருண்டை இறுகி, கெட்டியாக ஆனது. ஆனால் அவர்கள் அதன் மேல் நின்றபோது ஒருபுறம் தாழ்ந்தது, மறுபுறம் உயர்ந்தது.

மிகப் பெரிய உருவம் கொண்ட பீமசேனன் அடுத்து விரைந்து வந்தான். அவன் ஒரு கால் வீட்டில் இருக்க, மறுகால் கடவுளிடம் இருந்தது. அவ்வளவு பெரிய பீமசேனன் விரைந்தோடி வந்தான். களைப்பாக இருந்ததால் சாப்பிட உணவு கேட்டான். கடவுள் 25 மூட்டை அரிசியும், 12 மூட்டை கீரையும் கொடுத்தார். அவன் அதை சமைத்துச் சாப்பிட்டு விட்டு, "இது என் பசிக்குப் போதவில்லை. மேலும் தாருங்கள்" என்றான். மீண்டும் 12 மூட்டை பருப்புக் கொடுத்தார் கடவுள். திருப்தியாகச் சாப்பிட்டான் தாகம் தீர்க்க பானம் கேட்டான். அவனை மது தேடிப் பருகிக்கொள்ளச் சொன்னார். "எங்கே தேடுவது?" எனக் கேட்டான். "போய்த் தேடிப்பார்" என்றார் கடவுள். காட்டிற்குப் போய்த் தேடினான். நீண்ட நேரம் கழித்து ஒரு பெரிய மரம் அருகே வந்தான் அதில் ஒரு குழி இருந்தது குழி நிறைய மது இருந்தது

மரத்தின் கிளைகளில் பச்சைப் புறாக்கள். நீலநிறக் குருவிகள், கிளிகள், காக்கைகள், மைனாக்கள், எனப்பல பறவைகள் மது அருந்திய சுகத்தில் தலையை அசைத்தவாறு மயங்கின. ஏன் இப்படி மயங்கிச் சாய்கின்றன என எண்ணினான் பீமசேனன். மரத்தின் மேல் ஏறிப் பார்த்தான். குழியில் மது இருந்தது தெரிந்தது. தன் கையால் மதுவை மொண்டு குடித்தான்.

"இதுவல்லவோ மது" என சந்தோஷத்தில் கத்தினான் வயிறு முட்ட மது அருந்தினான். மது மயக்கத்தில் தலை அசைய, பறவை களுடன் தானும் அமர்ந்து மயங்கினான். பின் 12 குடுக்கைகளில் மதுவை நிரப்பிக் கடவுளிடம் கொண்டு வந்தான். காக்கையும், கடவுளும், காற்றும் சேர்ந்து இலைத் தொன்னைகளில் மது அருந்தினர். அனைவரின் தலைகளும் மதுமயக்கத்தில் ஆடின; தொய்ந்தன. விருந் தாடிய களிப்பில் வேலையைத் துவங்கினான் பீமசேனன். உலகத்தைச் சுற்றி நோட்டம் விட்டான்.

மெலிந்து நலிந்த இடத்தில் மலைகளை நிறுவி திடப்படுத்தினான். மிகக் கனமான இடத்தில் பள்ளத்தாக்குகள் உண்டாக்கினான். இளக் கமான இடங்களில் மரங்கள் நட்டு இறுக்கினான். அப்போதும் உலகம் உறுதியாக இல்லை. மண் பிரிந்தது; சிதறியது; உடைந்தது, சிலந்திக்கூடுபோல

5 வருடங்கள் உருண்டோடின. நங்கா பைகாவும் அவன் மனைவியும் ஒரு நிலப் பிளவிலிருந்து பிறந்தனர். பூமித்தாயைப் பார்த்து, நங்கா பைகா, "அம்மா, என் பிடில் எங்கே?" எனக் கேட்டான்.

"நீ இன்னும் குழந்தையே! உனக்கு எதற்கு பிடில்?" என பூமித் தாய் கூறினாள். ஆனால் அதே நாளில் மூங்கில் பெண் பிறந்தாள். நங்கா பைகா, ஒரே மூச்சில் மேலும கீழுமாக மூங்கிலை வெட்டினான். தன் முடியினால் பிடில் நரம்புகள் செய்தான். வாசித்தான். இனிய கானம் கடவுளை உலுக்கியது. பைகாக்கள் பிறந்தது கடவுளுக்குப் புரிநதது. அவர்களைக் கூப்பிட்டு அனுப்பினார்.

முறம் ஒன்றில் படுததுத் தூங்கிய நங்கா பைகாவை பூமித்தாய் எச்சரித்தாள். "கடவுள் கூப்பிட்டால் போகாதே மகனே" என்றாள் ஆனால் நங்கா பைகா சிறிதும் பயமினறி பிடிலை எடுத்துக் கொணடு கிளம்பினான். "உன் ஆணிகளால் உலகத்தை ஸ்திரப்படுத்து" என்று கடவுள் கட்டளை இட்டார்.

நங்கா பைகாவிடம் ஆணிகள் இல்லை. சற்றும தயங்காமல் தன் வலது கை சிறுவிரலை வெட்டி, பூமிக்குள் ஆழமாக அடித்தான் கடவுளுக்கு திருப்தி இல்லை. "இனனும் உரமான தூண்கள் கொண்டு உறுதிபபடுத்து" என்றார்.

நங்கா பைகா அக்யாசூர் எனும் நெருப்புக் கடவுளை நினைதது வேண்ட, அக்யாசூர் நெருப்பை உமிழ, இரும்புக் கொல்லன அகாரியா பிறநதான். நெருப்பிலிருநது பிறந்ததால் சிறிதும் பயமினறி, கனனற இருமபைத் தன் கைகளால் நெருப்பிலிருந்து எடுத்தான். அகாரியா 12 இருமபுத் தூணகள் செய்து உலகின 4 மூலைகளிலும் அடித்து நிறுத்தவே, உலகம் நிலையாக நினறது. மகிழநத கடவுள் விதைகளைத தூவ, செடிகள் உருவாகின. இப்படியாக உலகம உதயமானது.

## சூரியனும் சந்திரனும்

நமது அடுத்த கதைக்கு இந்தியாவின் வடகிழக்கு எல்லைப் பிரதேசத்தின பெரிய மலைக்குச் செல்வோம். இந்தியாவின மலைவாழ் மககள சூரியனையும, சந்திரனையும் தம் இஷ்ட தெய்வங்களாக வணங்கு கிறார்கள். அதிலும் சூரியனைப் பெண் தெயவமாகவும, சநதிரனை அத்தெய்வத்தின கணவனாகவும் மதித்துப் போற்றுகின்றனர். சியாங் நதியின் இடது கரையில் வாழும மின்னியா எனும் பழங்குடியினரின் மத்தியில் வழங்கும் இநதக் கதை, மேற்கண்ட நம்பிக்கைக்குச் சான்று பகரும.

இவர்கள் கதையின்படி பூமி பெண்; ஆகாயம் ஆண். இவர்கள் மணம் புரிந்து வாழ்வை ஆரம்பிக்க நினைத்த போதுதான் வந்தது

வினை! விண்ணும், மண்ணும் ஒன்று சேரும்போது மணவாழ் உயிரினங்கள், தாங்கள் இடையில் நசுங்கிச் சாகாமல இருக்க வழி என்ன என்று யோசித்தனர். சேடி-டியோர் எனும் ஆவி விண்ணைப் பிடித்து அடித்த அடியில் மண்ணை விட்டுப் பிரிந்து, விண, மிகத் தொலைவு சென்று விட்டது. மண் 2 பெண்மக்களை ஈன்றாள் விணணைப் பிரிந்த மண் மிகவும் கவலையுற்று பிள்ளைகளை ஏறெடுத்தும் பார்க்கவில்லை.

சேடி-டியோர் ஒரு பணிப்பெண்ணை வேலைக்கமர்த்தி பெண் களைப் பாதுகாததது. பெணகள் ஓடியாடி நடககும பருவத்தில் அவர்கள் உடலில் ஒளி வீசியது. நாள்தோறும் ஒளி கூடியது. இதற்குள் இவர்களை வளர்த்த பணிப்பெண இறந்தாள். சேடி-டியோர் அவளைப் புதைத்தாள். குழநதைகள் அவளைத் தம் தாய எனறே எண்ணி வந்ததால் அவர்களால் அநதத துன்பத்தைப பொறுத்துக கொள்ள முடியவில்லை. தன் தாயின பிரிவிற்காக அழுதனர். அழுத அழுகையில் இறந்து போயினர் அவர்களோடு ஒளியும போயவிட்டது.

எங்கும் ஒளியினறி இருட்டிப் போனதால ஆவிகள், மனிதாகள், மிருகங்கள் யாவும மிகப் பயந்து போயினர். தாதி ஏதோ ஒனறைக் குழந்தைகளிடமிருந்து திருடி இருககவேண்டும் என ஆவிகள எணணின இந்த எண்ணம் அவாகளை மிகவும கவலையடையச் செயதது ஆகவே தாதியின புதையுணட உடலைத் தோண்டிப் பார்த்தன. கணகளைத் தவிர உடலின் பிற உறுப்புக்கள மணணோடு மக்கிப் போயிருந்ததைக கணடன. தாதியின கண்கள மட்டும் உயிர்த் துடிபபுடன் ஒளி வீசிக கொணடிருந்ததைக கணடன. ஊனறிப் பார்த்ததில தததம உருவத தையும் கண்டன, தம உருவம சிறைப்படுவதுபோல, இறநத குழநதை களின உருவமும் சிறைப்பட்டிருக்கலாம் என நினைத்தன கணகளைத் தனித்து எடுத்து நீரோடையில 5 பகல், 5 இரவாகக் கழுவி எடுத்து ஒளி வீசச் செய்தன. ஆனாலும் பதிநத உருவத்தை நீக்க முடியவில்லை தச்சனுக்கு ஆள அனுபபினா. தச்சன் கவனமாக வெட்டி, சிறைப்பட்ட உருவத்தை விடுவித்துவிட, உயிர்க குழநதைகள் வெளி வநதனர். ஒரு பெண சேடி-இர்காங்-போமாஸ் என்றும், இனனொரு பெண சேடி-இர்காங-போங் எனறும பெயர் பெறறனர். இம்முறை இவர்களை வீட்டிற்குள் வைததுப போறறி வளர்த்தனர்.

பிளளைகள் வளாநதபின் ஒருநாள் மூத்தவள் போமாங் பளிச்சிடும பட்டாடை, நகைகள் அணிநது உலகத்தைச் சுற்றி வரப்புறப்பட்டாள். அவள் வீட்டை விட்டு வெளியே வரும்போது அவளைச் சுற்றி வெளிச்சமாயிருக்க, அதுவே பகலாயிற்று. மலைக் குன்றினூடே செனற அவள் வீடு திரும்பவில்லை

நீண்ட நேரமாகியும் வீடு திரும்பாததால் போங அக்காவின பாதச் சுவடைப பின்பற்றி நடந்து அவளைத் தேடிச் சென்றாள. இநதப்



பெண்ணைச் சுற்றிலும் மிகப் பிரகாசமான ஒளிவட்டம் செல்லவே, அந்தத் தகிப்பிலும், வெளிச்சத்திலும் பாறைகள தகாநதன, மரங்கள் கருகின; மனிதர்கள் மயஙகி விழுந்தனர்.

ஆவிகளும், மனிதர்களும், மிருகங்களும் கூட்டம் போட்டு ஆலோசித்ததில இரணடு பெண்களில் ஒருத்தியைக் கொல்ல முடிவு

கட்டினர். ஆனாலும் இந்தக் கொலையைச் செய்ய மிகத் தயங்கினர். கடைசியில் ஒரு தவளை கொலையைச் செய்ய ஒப்புக்கொண்டு, கையில் வில்லுடன் பாதையைப் பார்த்துக் காத்து நினறது. போங் வந்தவுடன் தவளை ஒரு அம்பினால் அவளைத் துளைக்க அவள் இறந்தாள். அவள் இறந்ததால் ஒளியும், வெப்பமும் சற்றுக் குறையவே மரங்கள் மீண்டும் துளிர்விட்டன; மனிதர்கள் தம் வேலையைத் தொடர்ந்தனர்.

இறந்த போங்கின் உடல் அங்கேயே கிடநதது. அவ்வழியே சென்ற எலி ஒனறு அவள் உடலைக் கண்டு, உடலைச் சுமந்து கொண்டு, போமாங்கிடம சென்றது. வழியில் பளுவின காரணமாகத் தடுக்கி விழ, அதனால வளைநது போன கால்கள மீண்டும் நேராகவே இல்லை. மீண்டும் எழுநத எலி போங்கின் உடலைச் சுமந்து கொணடு போமாங கடந்து செலலும் வழியாம் ஒரு நதியின பக்கம சென்றது. போமாங தன் சகோதரியின இறந்த உடலைக் கணடதும அழுதாள். தானும் கொலை செயயபபடலாம என எண்ணி அஞ்சினாள். யாரும் நடக்காத தனி வழியே செனறு தலைமீது ஒரு பெரிய கலலைத் தாங்கித் தன்னை மறைத்துக் கொணடு அமர்ந்தாள். கல்லின் நிழல பூமியின் மேல் படவே, பூமி இருண்டு போயிற்று.

இருட்டைக் கண்டு ஆவிகளும. மனிதர்களும், மிருகங்களும பயந்து போயின; மீண்டும வெளிச்சத்தைத் தேடத் துவங்கின. முதலில் அவாகளால் அவளைக் கணடு பிடிகக முடியவில்லை. எலி, காட்டுக் குருவி, சேவல் எனபபல உயிரினங்களை அனுப்பி, தொலைநது போன பெண்ணைத் தேடச் செயதனா

எலியும, காட்டுக் குருவியும் தததம வேலைகளை நாடிச் சென்றுவிட, சேவல் மட்டும பொறுமையாகத் தேடிப பாாத்தது கடைசியில் போமாங்கைக் கணடுபிடித்து, உடன் வருமாறு கெஞ்சிக் கேட்டுக் கொண்டது. "இலலை, நான வரமாட்டேன். என் சகோதரியைக் கொனறது போல எனனையும கொன்றுவிடுவர் என சகோதரியை உயிர்ப்பித்தால்தான நான் வருவேன் என்று கூறிவிடு" என்றாள். சேவல் போய் சேதி சொல்ல, மீண்டும் அனைவரும் தச்சனின உதவியை நாடினர். தச்சன இறந்த போங்கின உடலைச செதுக்கிச் சீராக்கினான்; அதற்கு உயிரும கொடுததான். சிறியதாகி விடவே, மென்மையாக ஒளி வீசியது போமாங் தன சகோதரி உயிர் பெற்றதை அறிநததும் கல்லைக் கீழே போட்டு விட்டு எழுந்தாள். காலை மீணடும் வர, சேவல் "கொக்கரக்கோ" எனறு கூவியது. காட்டுக் குருவி "பெங்கோ, பெங்கோ" என்றது. எலி "தக், தக், தக்" எனறு குதித்தது ஒளியும் வெப்பமும மீண்டும கிடைத்ததால் எழுநத ஆனநதக் குரலொலியாகும் அது!

# விண்ணின் ஆடலழகிகள்

ஜோகி ஜோரியானிற்கு ஏழு பெணகள். இந்த இளம் கன்னிகள் மிக அழகானவர்கள். வருடத்தின் மிகப் பெரிய பண்டிகைப் பொழுது ஒன்றில் கிராமத்தின் பிற இளம் கன்னிகள் அனைவரும் சேர்ந்து களிநடனம் ஆடினர். கிராமத்து இளைஞர்களின் கொட்டிசைக்குத் தக்க நடனமாடியவாறே மேலே பறந்து சென்றனர்.

ஆட்டத்தின் வேகம் வல்லூறற்றின வேகத்திற்கு இணையாக இருந்தது. பெண்கள் வான மண்டலத்தினூடே பறநது சென்றனர். மேகக் கடவுளிடம் சென்றனர். ஆட்டத்தில் மிக மகிழ்ந்துபோன அவர், பெண்களைப் பூமிக்குத் திருமபி அனுப்ப மறுத்தார். "நான்



பூலோகத்திற்கு மழையை அனுப்பும் போது ஆடலழகிகளாம் நீங்கள் மேகத்தினூடே அழகாக நெளிந்து ஆட வேண்டும். உஙகளுடன பூலோகப் பையன்கள் ஆட்டததிற்குத் தக்க கொட்டு அடிகக வேண்டும்." என்றார் மேகக் கடவுள். பெணகளை மின்னல் எனவும், பையன்களை இடி எனவும அழைத்தார்.

ஒரிஸாவில் பழஙகுடியினரிடையே வழங்கும இந்தக் கதையைப் போலவே இன்னொரு மினனல் கதையும் உண்டு. அது வடகிழக்கு இந்தியப் பகுதியில் வாழும நாக்டெஸ் இன மக்களிடையே வழஙகுகிறது. இந்தக் கதையின்படி, இரணடு சகோதரர்கள் இருநதனர்; மூத்தவன பூவுலகிலும, இளையவன வானத்திலும் வசித்தனா அவவப்போது இளையவன் ஆட, மழைத்துளி கீற்றாக பூமிக்கு இறங்கி வருகிறது. அப்போது அவன அழகிய மணவாழ் பெண்களிடம், "இநத மழை முத்துககளைக் காட்டிலும் அழகிய முதது்க்கள உணடா?" எனக கேட்கிறான. சில சமயம மினனலை அனுப்பி "மணவாழ மக்களுக்கு இதை மிஞ்சும் மந்திர சக்தி உணடா?" எனக கேட்கிறான சில சமயம தன கொட்டு அடித்து வானில் செல்லும் போது பூவுலக மககளிடம், "இதற்கு இணையான இசை உணடா?" என்கிறான

மிஷி இன மக்களுககு இநத அளவு கற்பனா சகதி இல்லை. அவர்கள் மேகத்தைக் காற்றின பன்றிகள் என்கிறார்கள. பெரிய இருமபுச் சங்கிலிகளால ஆன பாதைகள் வானத்தினூடே செலகினறன வாம. இரண்டு பனறிகள் சநதிக்கும் போது சண்டையிட, அவைகளின தடிப்பான ரோமஙகள மோத, மினனல்கள் பளிச்சிடுகினறனவாம். பன்றிகள் சண்டையினபோது உறும, அதுவே இடியாக உலகில் கேட்கிறதாம்.

## வானவில்

உலகைக் காக்க நான்கு நீர்த்தேவதைகள் உண்டு. லுகார்போ, வெண்தேவதை; லுனாக்பூ கரும தேவதை; லுசிர்பு மஞ்சள தேவதை; லுமார்போ சிவப்புத் தேவதை. நீர்ச் சுனைகளில் வசிக்கும் இவர்கள வானில் தங்களைப் போல அழகுள்ள வாழ்க்கைத் துணையை நாடிச் செல்கின்றனர். வானில் இவர்கள் நடக்கும் பாதையே வானவில. இந்தப் பாதையில் இவர்கள் நடக்கும்போது மழை தூவுகிறது. இது டீ, அரிசி ஆகியவற்றிலிருந்து தயாரிக்கப்பட்ட ஒரு வகை பானம ஆகும. இவற்றைக் குடித்துச் சற்றே இளைப்பாறிக் கொள்கிறார்கள்.

# பசியுற்ற குழந்தைகள்

முனனொரு காலத்தில் இரு சகோதரர்கள தம மனைவியருடன போங்லங்கரா மலையில் வாழந்து வநதனர். அவாகளுக்கு நிறையக குழந்தைகள். வறுமையின் காரணமாக உணண உணவினறி வாடினர் ஆகவே இரணடு குடும்பங்களும மலை மீது ஏறி அலைந்து உணவு தேடினர். அங்கும் உணவு இல்லை ஆகவே விரக்தியடைநது தம் குழநதைகளை மலைமீது விட்டுச செனறனர். குழநதைகள் பசியால நலிவுறறு விணநோக்கிக் கதறி அழுதனர்.

வானில லுஜ்பு, ஜஸ்பு எனும கடவுளர், சோதது வைத்திருந்த சமைத்த சாதத்தைக் குழநதைகள பசியாறுமாறு கீழே வீசினர். வீசிய சாத உருணடைகளே தற்போதைய பனி உருண்டைகள்

# முதலில் தோன்றிய ஆறுகள்

பிரமமபுததிரா நதி சூரியனின சகோதரியாம. சூரியனின பாதையில் எநதத் தடைக்கற்களும இல்லாததால் மிகவும் சுதந்திரமாகத தான விருமபும் திசையில் செலகிறான ஆனால சகோதரி பிரமமபுத்திராவிறகு அபபடி இலலை ஆதி காலததில் பூமியில நடநது செலவது சிரமமாக இருநதது நிமடுமிரம எனும் இடததில ஒரு பெரிய ஏரியில பூமியின கடைசி எல்லையில அவள் வசிததாள பூமியின பிற பாகத்தில் தணணீா இல்லை. உயிரினங்கள் தணணீரினறி வாடின

புழு ஒனறிறகுத் தாகமெடுததால் நீர் பருக வநதது. ஒரு குழி தோணடவே, கொஞசம நீா வநதது காடடுபபூனை ஒனறு அதைப பாாதது நீா பருக வநதது ஆனால தணணீர் கலஙகலாக, மிகக் கொஞசமாக இருநதது. ஆகவே அபபூனை நிமடுமிரம ஏரிககுப் போய பெரிய குழி தோணடி வேணடிய மட்டும நீா பருகிவிட்டுச சென்றது. வழிநத பிரமமபுததிரா, காடடுபபூனை திரிவது போல அதனைப் பினபறறித் திரிநது செனறாள.

டிராகுப் எனும தேவன அதைப பார்ததும் அவள ஓடடததைத தடுக்க நினைததான ஒரு கூடை நிறைய மணணை எடுததுப் பாதை யின குறுக்கே சுவா எழுபபித் தடுததான. செயினி எனும இனனொரு தேவன மககளுககுப பயனபடாமல் நீா தடுக்கபபட்டதைக் கேளவி யுற்றதும கோபமுறறாள் டிராகுபிடம போய, “சகோதரனே, நீ திறமை யானவன ' அபபடி இருகக, பிரமமபுததிராவின நீாப போககைத் தடுதது விட்டாயே ' உனக்கு ஒரு கெடட செயதி கூறபபோகிறேன உன மனைவி தணணீா இனறி இறநதுவிட்டாள நீ போயபப பார்” எனறான

டிராகுப்புவுககுக் கவலை இல்லை. "ஒரு மனைவி இறந்தால் என்ன ? ஆயிரம மனைவியா கிடைப்பாரே !" என்றான். செயினியால் அணைக்கட்டைத் தகாக்க முடியவில்லை. திரும்பவும் முயன்றான். "இனனொரு கெட்ட செய்தி! உன மகனும் இறந்துவிட்டான் !" என்றான். டிராகுப, "பரவாயில்லை. ஒரு மகன போனால் ஆயிரம் மக்கள் மீணடும் கிடைப்பரே !" என்று பதிலுரைத்தான். செயினிக்கு இம்முறையும ஏமாறறமே! மக்களின் அவதியை உணாநது திருமபவும் முயன்றான. "இப்போது உன தாயும தணணீரினறி இறந்து விட்டாள. இப்போது என்ன சொல்லப் போகிறாய் ?" எனக் கேட்டான டிராகுப் தனக்குள் கூறிக் கொணடான் "மனைவியரும, மககளும் திரும்பப் பெறலாம். ஆனால வேறு அனனை கிடைக்கமாட்டாளே ' நான் போய்ப் பார்ககிறேன" எனறு தன வேலைகளை நிறுத்திப போனான.

உடனே செயினி அணையை உடைக்க, பிரமமபுத்திரா பிரவாகமாகப் பொஙகிப பாய்ந்தாள். மலைகளைக் கடந்து சமவெளிகளின் இடையே ஊாநதாள். அஸ்ஸாம சமவெளிகளை அடைந்து நினறாள அவள் பாய்ந்த இடமெல்லாம் மணணும், மக்களும், உயிரினஙகளும தழைத்தன. இககதை வடகிழககு இந்தியாவில் வாழும் இடுமிஷ்மிக்கள கூறியது. நதிகளைப் பறறிய இன்னொரு கதை ஒரிஸாவைச் சேர்ந்த கமார்கள கூறியதாகும. அதன்படி, முன்னொரு காலத்தில் ஒரு தமபதியா தம ஒரே மகனுடன வாழநது வநதனர்



ஒரு நாள் இந்த மகன் நோயவாயப்பட, பெற்றோர் பதறிப் போயினர். மந்திரவாதியை நாடினர்; மருந்து மூலிகைகள் பறித்துக கொணர்ந்தனர்; ஆடுகளும், புறாக்களும கடவுளுககுப் பலியாக்கினர். கடைசி முயற்சியாக வயதான தந்தை, ஒரு புகழ்பெற்ற மந்திரவாதியைக கூட்டி வநதான்.

அநத மநதிரவாதி, வீட்டிறகுள வருமுனனரே, மகனின் உயிர் பிரிநதது. தனியே இருநத தாய் வீறிட்டு அலறி அழ ஆரம்பித்தாள. பரிதாபம' அவளின் ஒரே மகனின மரணம அவளை மிகவும் உலுக்கிவிட்டது' கணகளில் பெருகிய நீர ஆறாக வழிநது ஓடியது குறுகிய நேரத்தில வெள்ளபபெருககெடுத்து ஓடியது.

மநதிரவாதியால வீட்டிறகுள் வர முடியவில்லை. வெள்ளம தடுததது. தநதை, தான வெளியே வநதபோது வெள்ளம இல்லையே எனத் தனக்குள கூறி மறுகினான. "ஏதோ ஒனறு நடநதிருககவேணடும் நீ உன வீட்டிறகுப்போ மந்திரவாதியே' இங்கே இனி உனக்கு வேலை இலலை'" எனறான. தாயின துயரம தணிநது கணணீர் வற்றியதும வெளளமும் வடிநதது. தகபபன ஆறறைத் தாண்டி வீட்டிறகுள வநதான அவன், "நீ இவ்வளவு கண்ணீர் விட்டு அழாமல் இருநதிருந்தால நான மநதிரவாதியை உள்ளே அழைதது வநதிருப்பேன. அவனும் நம மகனைக காபபாற்றி இருப்பான." எனறான ஆனால அவளோ, "நான அழுதது உலகில நதிகளை உருவாககவே" எனறாள். தகபபன மிகவும் கோபபபட்டான் "நதியை உருவாக்க, நம மகனைப பலியிட்டு விட்டாயா?" என்றான். மனைவியை அவள உருவாககிய நதிக்கே பலியிட்டான. தானும் நீரில் குதிதது மாணடான. இவர்களின பலியில் உருவான நதியினால் உலகம மகிழ்நதது

## முதல் நில நடுக்கம்

பீமராஜா மகுலாகதா குனறின மேல வசித்தபோது அரசு ஒனறு அமைத்து ஒவவொரு கிராமத்தையும் முறை வைத்துத் தன் அரண மனையில வேலை பார்க்க வைத்தார். ஒவ்வொரு வீட்டிலிருந்தும ஒருவன போய் வேலை பார்க்க வேண்டிய முறை. ஒவ்வொரு வீடும வருடத்தில் இரண்டு முறை வரி கட்டவேண்டும் எனறு பணிததார் பிரஜைகளிடமிருநது நேரடியாக வரி வாங்காமல் நூதனமாக ஒருமுறை வைத்திருந்தார். முயல்கள் சுமக்கும அளவுக்கு நாணயங்களை மூட்டை கட்டி அவற்றின மேல் வைத்து, அவற்றை அரணமனைககு அனுப்பச் செய்தார்.

இதனால மக்கள தம வீடுகளில் முயல்கள் வளர்கக வேண்டியதாயிற்று. சிறு முயல்களை நனகு கொழுகக வைத்துப்

பழக்கினார்கள். அவை நனகு வளர்ந்ததும், நானகு அல்லது ஆறு சிறு கிராமங்கள் ஒன்று சேர்ந்து ஒரு முயல்மீது பொதி கட்டினர். ஆனால் அதிகப் பளு ஏற்றியதால் முயலால் ஓட முடியாது. மெதுவாக நடந்து சென்று அரண்மனையை அடைய ஒரு மாதம் ஆனது. கிராமத்து மக்களுக்கு அது சிரமமாகப்படவே இந்த முறையைக் கொண்டு வந்த அரசரைக் கொல்ல முடிவு செய்தனர். அரசரைக் கொல்ல ஆயுதம் ஏந்தி அரணமனை நோக்கிச்சென்றனர்.

அரசருக்கு இரண்டு மகன்கள். இருவரும் இளைஞர்கள் புரட்சி யாளர்கள் அரண்மனைகருள் நுழைந்தபோது அரசர் அரசவையில் இருநதார். அவரை அங்கேயே கொன்றனர். அரசர் கொலையுண்டதைக் கேட்டவுடன் அரசி தன் இரு மகன்களை ஒரு சேமிபபு அறையில வைத்துப் பூட்டி விட்டாள். தன் தங்க, வெள்ளி நகைகளை ஒரு சிறிய பெட்டியில் வைத்துக கிணற்றுக்குள் ஒளிதது வைத்தாள். பின் அவளும் அவள் சேடிப் பெண்ணும் கிணற்றுக்குள குதித்துத் தற்கொலை செய்து கொணடனர். அரசனின மெய்க்காப்பாளர்களும, வேறு சில பிரதம வேலையாட்களும் கொல்லப்பட்டனர். சிலர் ஒளிந்து கொணடு தப்பினர் புரட்சியாளர்கள ஒளித்து வைக்கப்பட்ட இளவரசர்களைத தேடினர். அவர்களால இளவரசர்களைக் கண்டுபிடிக்க முடியவில்லை

புரட்சியாளர்கள சென்றபின இளவரசர்கள் அறையைவிட்டு வெளியே வர முயற்சி செய்தனர் கதவை ஓங்கித் தட்டிப் பார்ததனர் ஆனால் வெளியே ஒருவருக்கும் கேட்கவில்லை அறைக கதவை ஆட்டிப் பாாத்ததில் உலமே ஆடியது இந்த இளவரசர்கள எபபோ தெல்லாம் கதவை ஆட்டிப பார்ககிறார்களோ அப்போதெல்லாம உலகம் ஆடியது. அவர்கள் தட்டுவதும் நிற்கவில்லை; அன்று துவஙகிய நிலநடுக்கமும் ஓயந்தபாடில்லை.

# ஆதி மனிதர்கள்

## மனிதர்கள் முதன்முதலில் தம் வாலை இழந்த கதை

மலைவாழ் மக்கள மனிதன தோனறியது குறிதது்ப் பலவேறு அபிப்பிராயஙகள கொணடுளளனா. சிலர், கடவுள தம கைகளினால முதல மனிதனைக் களிமண கொணடு உருவாககினார் எனக கூறுகிறாாகள. சிலர் ஆதிமனிதன பெரிய முட்டையிலிருந்து வெளிவநததாக நமபுகிறாாகள். வேறு சிலர், பூமிததாயின குழநதையாய பூமி பிளந்து மனிதன் வெளிவநததாயக் கூறுகிறாாகள சிலா ஒருதேவதைககு மகனாகப பிறநதவனே ஆதி மனிதன எனவும், இனனும் சிலர் விலஙகிலிருநது பிறநதவனே மனிதன எனவும சொல்கின்றனர் ஆனால எல்லாரும ஒததுக்கொளளும விஷயம ஒன்று உணடு; ஆதி மனிதன, தறகால மனிதனைவிடத தோறறததில நிறைய மாறுபட்டிருநதான. இந்த ஒத்த கருததைப பினவரும கதை மூலம அறியலாம. ஒரிஸாவைச் சேர்நத சாரோககாகள் ஆதிமனிதர்களுக்கு வால் இருந்ததாக நமபுகினறனா

மனிதர்களுக்கு வால் இருநத பழஙகாலத்தில அவாகளுடைய வாலகள் தரையைத் தொடுமளவுககு நீணடிருந்தன. ஜனத்தொகை பெருகவே, விசேஷ காலங்களில், கலயாணக கூட்டஙகளில், சாவுக் கூட்டங்களில் ஒருவருடைய வாலை மற்றவர் மிதித்தனர்; தடுக்கி விழுந்தனர். இது மிகுந்த வேடிககையாக இருநதது.

ஒருமுறை கிட்டுங் எனும கடவுள் சந்தைககுப் போனபோது வழக்கம்போல் அங்கு ஒரே கூட்டம நல்ல புகையிலைக்காக கடைகடையாகத தேடி அலைநதபோது யாரோ ஒருவர் வாலினால தடுக்கிவிட, நிலைகுலைந்து விழுந்துவிட்டார். துரதிருஷ்டவசமாக கல்லின் மேல விழுநததால் முன்வரிசைப் பற்கள இரணடு கீழே விழுந்தன. சந்தை முழுதும் சிரிக்க, கிட்டுங்குக்குக கோபம் வநதது. இத்தனைக்கும் காரணமான வாலைப பிடுஙகித் தூர எறிநதார். பிறவால்கள் இதைப் பார்தததும் பயநது போய்த் தாமே உடலிலிருநது கழட்டிக் கொணடு ஓடின. கிட்டிங்குவின வால் பனைமரம் ஆனது. பிற வால்கள புற்களாகி இப்போது துடைப்பம் செய்யப பயன்படுகினறன.

## குள்ள மனிதர்கள்

பாஸ்தாரைச் சேர்ந்த முறையாஸ இன மக்கள், ஆதி மனிதர்கள் மிகவும் சிறிய உருவம் பெற்றவர்களாய இருந்ததாயக் கூறுகிறார்கள்.

உலகம உருவான ஆதிகாலத்தில் சூரியனோ, சந்திரனோ இல்லை. விண்ணும், மண்ணும் கணவன், மனைவியாக ஒட்டி உறவாடி இருந்தன. விண்ணும், மண்ணும் மிக அருகில் இருந்தன. மனிதர்கள் மிகக் குறுகிய உருவம் பெற்றிருநதால் மட்டுமே இடையில நடக்க முடியும். குள்ள மனிதர்கள் எலியால நிலததை உழுதனர். கத்தரிக்காயை இப்போது நாம் மாமரத்தில் மாங்காய் பறிப்பதுபோலப் பறித்தார்கள். நிமிர்ந்து நடக்கும்போது தலைமீது மேகக் கூட்டங்கள மோதின. கஷ்டங்களைப் பொறுத்துப் பார்த்தனா; களைத்துப்போயினா.

ஒருநாள ஒரு வயதான கிழவி, தன தோட்டததைக கூட்டிக கொண்டிருந்தாள் அவள் துடைபபம மேகத்தை இடித்தது. கோபமுற்ற கிழவி துடைப்பத்தைக் கொணடு மேகத்தை ஓங்கி இடித்தாள. பயந்துபோன மேகம் அவளை விட்டுத் தூர, உயர விலகியது. விலகிய மேகம் இப்போதுள்ள உயரததில் நிலை நின்றது. இதற்குப் பிறகு குள்ள மனிதர்கள் வளர்ந்து தன் சுய உருபபெற நிறைய இடம் இருந்தது.

## கண்கள் உருவான விதம்

மனிதர்கள் கண்களைப் பெறுமுன், கண திறககாத நாயக்குட்டிகள் ஒன்றுடன் ஒன்று உருண்டு விளையாடுவதுபோல, ஒருவர் மீது ஒருவர் உருணடு கொண்டிருந்தனர். அவர்களால் கணகளின்றி ஒரு வேலையும் செய்ய முடியவில்லை; நீண்ட நாட்கள் உயிர வாழவும் முடியவில்லை. ஒருநாள் கடவுள, "நான் இந்த உலகம் முழுவதையும் என் குழநதைகளாம மனிதர்களுக்காக உருவாக்கினேன். அவர்கள எப்படி இருக்கிறார்கள் ?" எனத தனக்குள் கூறியபடி, மத்திய உலகத்திற்கு வநதாா

மனிதர்கள் கண்களினறி மோதிக கொள்வதையும், தம் நேரததை வீணே செலவழிபபதையும் பார்ததுக் கடவுள் மனம் வருநதினாா். அப்போது ஒரு நதிக்கரையில் பெரிய கண்கள் கொண்ட நணடு ஒன்றைப் பார்த்தார். "தற்போது இதன் கணகள்தான் எனக்குத் தேவையானது" என்று எண்ணி நண்டைப் பிடிக்க எத்தனித்தார். நணடு அவரைக் கடித்துவிட்டுத் தன் வளையில் ஒளிந்து கொண்டது. கணகளையும் தன் உடலினுள் சுருக்கிக் கொண்டது.

கடவுள் காட்டுக்குள் நுழைந்தார். இம்முறை பெரிய கண்களுடன் கூடிய ஆந்தை ஒன்றைக் கண்டார். அதனைப் பிடிக்க முனைந்தபோது,

அது தன் கூரிய நகங்களால் அவரது முகத்தைக் கீறி விட்டுப் பறந்தது.

களைத்துப்போன கடவுள் ஒரு அத்தி மரத்தடியில் அமர்ந்தார். மரத்தின் கிளையில் ஒரு காகம் பழத்தைச் சாப்பிட்டபடி அமர்ந்திருந்தது. கடவுள் கீழே விழுந்து கிடந்த சில கற்களைப் பார்த்தார். "இவற்றை நலல கண்களாக மாற்றலாமே!" என எண்ணி குனிந்து எடுத்து கண்களாக மனிதர்களுக்குப் பொருத்தினார். அது முதல் மனிதாகளால் பார்க்க முடிந்தது.

கண்கள் கிடைத்த பிறகும் மனிதர்களுக்கு இமைகளோ, இமைகளிலுள்ள முடிகளோ இல்லை. தூங்கும்போதும் கண்கள் திறந்தே இருநதன.

ஓர் இரவில், ஒரு வயதான கிழவன் தன மனைவி, பெண், மகன எனும் தன குடும்பத்தோடு தன குடிசையில் தூங்கிக் கொணடிருநதான அங்கே மூன்று நீர்த் தேவதைகள் வந்தனர். கண்கள் திறநதபடியே தூஙகும அவர்களைப பார்த்து ஏன் தங்களைக் கணடபினனும எழுநது வணஙகவிலலை எனத் திகைத்தனர் காலையிலும அவர்கள கணகள் திறநதபடியே இருக்கக் கணடனர்; வியந்தனர். தமக்கும் அவர்களுக்கும் உளள வேற்றுமையின் காரணம புரியத் தம் கண்களைக் குளத்தின் தெளிந்த நீரில நோக்கினர் தம கண்களில் இமைகளும், இமை முடிகளும இருக்க, மனிதாகளுககு இவை இல்லை எனபதை உணாநதனர். காடு சென்று மயில ஒன்றினைப் பிடிததனர். மயிலிறகைப் பிடுங்கி, இமையும, இமை முடியும் செய்து அதனை அககுடுமபததினருக்குக கணகளில் ஒட்டவைததனா அது முதல இமை, முடியுடன் கூடிய கணகள மனிதாகளுக்கு உரியதாயிற்று.

## மனிதர்கள் பேசத் துவங்கிய வரலாறு

ஆதிகாலத்தில் மனிதர்களுக்கு நாக்கு இல்லை. ஆகவே பேசும் திறனும இல்லை. இதனை எப்படி ஈடுகட்டுவது என்று கடவுள் திகைத்தார். யோசித்தார்; ஒரு யோசனையும் புலப்படவில்லை. ஒருநாள் நீராடி விட்டுப் பாறை ஒனறில் அமர்ந்து வெயிலில் தன்னை உலர்த்திக் கொண்டார். அநதப் பாறையின் அடியில ஒரு தவளை இருந்தது. தன துணைவியை நோக்கி அத்தவளை, "நாளை மழையில் வரும் வெள்ளத்தில் நம் வளை நிரம்பி நம் குழந்தைகளையும் அடித்துக் கொண்டு போய்விடுமே" என்றது. தவளை பேசியது கேட்டு, கடவுள் தவளையைப் பிடித்து அதன் நாக்கை உற்று நோக்கினார். "ஆஹா! இதுதானே மனிதருக்குத் தேவையானது!" என்று தவளையின் நாக்கை அறுத்து மனிதனின் வாய்க்குள் வைத்து ஒட்டினார். அது முதல் மனிதர் பேசத் துவங்கினர்.



## பெரும் காதுகள்

முநதைய காலநதனில் மனிதருக்கு மிகப பெரிய காதுகள் அவை எவவளவு பெரியவை எனில், ஒரு காதில நீட்டிப் படுத்துக்கொண்டு, இன்னொரு காதைப் போர்வையாக்கிப் போர்த்திக் கொள்ளலாம்.

ஒருநாள கடவுள வேட்டையாடச் சென்றார். மனிதனின் காது அவன் உடலளவு இருநததால், மனிதனை மிருகம் எனத் தவறாக எடுத்துக்கொணடாா. அம்பு எயது அவனைக் கொன்றார். வீழந்த உடலைப் பார்த்ததுமதான் தன் தவறு புரிநதது. இனியும இநதத் தவறு நடககக் கூடாது என மனிதனின் காதுகளை வெட்டிக் குறுக்கினாா இறநதவனைத் தன சக்தியால் உயிர்ப்பித்தார்.

அந்த நாள் முதல் மனிதனுக்குக் குறுகிய காதுகளே நிலைககலாயிற்று.

# தாடியுள்ள பெண்கள்

ஆதிகாலத்தில் பெணகளுககும் ஆண்களைப் போன்று தாடியும், மீசையும் இருநதன அக்காலத்தில் புலியே காட்டு விலங்குகளின் அரசன். இந்தப் புலி அரசனுக்கு ஒரே மகன். மகனுக்கு மணம் முடிக்கப் பெண் தேடினான அரசன். காட்டு விலங்குகளிடம, "அழகிய பெண ஒருத்தி கிடைத்தால் என் மகனுக்கு அவளையே மண முடிப்பேன். அவளே அரசனின் பிரிய மருமகள்; காட்டின் இளவரசியும் கூட" என்றான் புலியரசன்

பெண் ஆடு ஒனறு இநத அறிவிப்பைக் கேட்டதும தன எஜமானியிடம் சென்றது. "அமமா, உன அழகிய முடியை எனக்குக் கடனாகக் கொடு. நான் புலி அரசனின மனதை வென்று அவன் மருமகளான பின் இரணடு அல்லது நானகு நாட்களில் மீணடும் வந்து உன உடைமையை உனனிடம ஒப்படைக்கிறேன்" எனறது ஆடு. எஜமானியும தன தாடி, மீசையை வெட்டி எடுதது ஆட்டிற்கு ஒட்ட வைததாள். ஆடடை வழியனுப்பியும் வைத்தாள். சென்ற ஆடும திருமபவில்லை வெட்டபபட்ட தாடி, மீசையும முளைககவிலலை அது முதல பெணகள தாடி, மீசையில் இருநது விடுபட்டனா.

# சாரமற்ற வாழ்க்கை

ஒரிஸாவைச் சோநத கொணடா் இன மக்கள கூறிய கதை இது ஆதி காலததில குஷி உணடாககும கூச்ச உணர்ச்சி மக்களிடம இல்லாத போது அவாகள ஒழுககத்துடன் இருந்தனர். சோந்து உட்கார்நது, பொறுபபுணாச்சியுடன தததம் கடனகள் பற்றியும, தம பயிர் விளைச்சல பறறியும பேசினா. இப்போதுபோல ஆத்துமறற சிரிப்போ, களளக்காதலின் சரசமோ, எதுவும அப்போது இல்லை.

நிரநதலா எனும தேவதைக்கு இது அலுப்பாக இருநதது. இநதச் சார மற்ற வாழ்கையைச் சற்றே மாற்றி, வாழ்வில வணணம சோகக நினைத்தது காடடுககுப போய மெழுகு எடுத்து, கூச்ச உணர்ச்சியை வெளிபபடுததும உயிா வணடு ஒன்றை உருவாக்கியது. ஆம, பெண, குழநதைகள ஆகியோரின வயிற்றுக்குள இநத வணடைச செலுததியது. "உளளே போனதும மோவாய் அடியில, அக்குளுக்குள, விலா அருகில, வசித்து வா யாராவது தோலைத் தொட்டால உளளே ஒடு அவாகளுக்குக கூசச உணர்வும், சிரிப்பும வரும" எனறு தேவதை வணடைப் பார்த்துக கூறியது வண்டும் அவவாறே செய்தது எட்டு நாட்கள கழிதது தேவதை, வண்டு உள்ளே நுழையப்பெறற ஆண,

பெண்களைக் காணச் சென்றது. பொறுப்புணர்ச்சி மறைய, எங்கும் காதல் வாழ்வும், சிரிப்புமே நிறைந்திருந்தது. ஒரு பெண்ணின் இடுப்பைத் தொட, பெண் சிரித்துக் குலுங்கினாள்.

இந்த அர்த்தமற்ற சிரிப்பும், கூச்சமும் இப்படித்தான் துவங்கின.

## வீர மக்கள்

இதோ ஒரு பரபரப்பான, விநோதமான கதை! அது உலகம் உதயமான காலம்! அப்போது கடவுள், மனிதன், மிருகங்கள், அரக்கர்கள் அனைத்தும் ஒன்றாய் வாழ்ந்து, பேசி, ஓட்டி, உறவாடி மகிழ்ந்த காலம்! வடகிழக்கு எல்லைப் பிரதேசத்தில் வாழும் அகாஸ் இன மக்கள் கூறிய கதை இது.



முன்னொரு காலத்தில் ஆவா எனும் மனிதன் ஒருவன் இருந்தான். அவனது உடல் கரடி போல, அடர்த்தியான ரோமங்கள் நிறைந்திருந்தது ஆயினும் சூரியனின அழகு மகள் ஜுஸம என்பவளை

மணந்து கொள்ள முடிந்தது. திருமணத்தின்போது தன் மகளுக்கு ஒரு கோழியின் இறகுகளையும், பன்றியின் தடிப்பான ரோமங்களையும் சூரியன் பரிசாகக் கொடுத்தான். ஆவா மணமகளைத் தன் இல்லத்திற்குக் கூட்டி வந்து மணவாழ்வை இனிமையாகத் துவங்கினான. உரிய காலத்தில் ஜுஸம் இரட்டையரை ஈன்றாள். ஒன்று பையன்; மற்றொன்று பெண். பையனை சிப்ஜி-சாவோ எனவும், பெண்ணை சிபஜிம்-சாம் எனவும் அழைத்தனர்.

பிள்ளைகள் வளர்ந்தனர்; சுகவீனமுற்றனர். தந்தை புரோகிதரை அழைத்து அவர்கள் சுகமடையும் வழி என்ன எனக் கேட்டான். புரோகிதர், வீட்டில் வளரும் ஒரு பறவையும, பன்றியும் பலியிடப்படவேண்டும் என்றார். ஆவா வீட்டில் பறவையோ, பனறியோ எதுவும் கிடையாது. ஆவாவின் கவலையறிந்த ஜுஸம், "கவலைப்படாதே ! ஒரு மூங்கில கூணடும், ஒரு தொட்டியும் செய்துவா" என்றாள். ஆவா அவ்வாறே மூங்கில கூண்டும. மரத்தொட்டியும செய்து கொண்டு வநதான ஜுஸம் மூங்கில் கூண்டின முன அமர்நது, தன் தந்தை தனக்குச் சீராகத தநத கோழி இறகில ஒன்றை எடுத்து ஊதினாள். உடனே ஒரு சேவலும, கோழியும் கூணடுககுள தோனறின. மரத்தொட்டி முன அமாநது, கொஞசம ரோமத்தை எடுதது ஊத, ஒரு ஆண பன்றியும ஒரு பெண பனறியும தோனறின.

கோழியும், பனறியும பசியால வாடின. வேறு உணவு ஒனறும இல்லாததால், தன குழநதைகளுக்கு உணவான தாயபபாலையே தர சம்மதித்தாள். ஆனால மிருகஙகள் அதனைப பருக மறுததன "நாஙகள் தாயப்பாலைப் பருகினால உனக்கு எங்களைக் கொலல மனம வராது. நாஙகள கொலலபபடப பிறநதவாகளே" என்றன பினனா கோழிகள் முட்டையிட்டுக குஞசு பொரித்தன. பன்றிக் குட்டிகள் பிறநதன. ஆவா. ஒரு கோழியையும, ஒரு பனறியையும பலியிட. குழநதைகள நோய நீங்கிச் சீராகினா

இவவாறு ஆவாவிற்குப பன்றிகளும கோழிகளும கிடைத்தன. ஆனால் அவைகளுக்கு உணவாகத் தானியஙகள் கிடைககவில்லை. ஜுஸம் தன கணவனிடம,"என தந்தை நிறைய தானியம வைத்துள்ளார். நீ நயநது கேட்டால நிச்சயம தருவார்" எனறாள

ஆவாவிற்கு வழி தெரியாததால, ஜுஸம அவனுக்கு வழி காட்டினாள். ஒரு பாதையைக் காட்டி, "இந்தப பாதை முடிவில இரணடாகப் பிரியும. வலது புறம பிரியும பாதையில சென்றால் என தந்தைவீட்டை அடையலாம். இடதுபுறம பிரியும பாதையில சென்றால் மிகுந்த கஷ்டஙகளை அனுபவிப்பாய்" என்றாள். ஜுஸம் வீடு திருமப, ஆவா பயணத்தைத தொடாந்தான. சரியான வலதுபுறப் பாதையைத் தேர்நதுதான முதலில சென்றான. ஆனால அங்கே முளளும,

குழியுமாகத் தெரியவே, மனைவி தவறாகக கூறி இருப்பாள் என நினைத்து இடது புறப் பாதையில் நடநதான.

மிகத் தொலைவு நடந்தபின ஒரு குகையைக் கண்டான் அதில ஒரு பிசாசு ! அதறகு ஒரு கண; ஒரு கை; ஒரு மாாபு அது தீயின் முன அமாநதிருநதது. ஆவாவைப் பாாததும ஒரு கட்டையை அவன முன போட, ஆவா உடனே நாயாக மாறிப் போனான.

நாயாக வீடு திருமபிய ஆவா, வீட்டிற்குள நுழைய மனமிலலாது, தலைவாசலில் படுததுத் தன் முனனஙகாலகள இரண்டையும வாசல்படிமேல வைத்தது. சிப்ஜி–சாவோவும. சிப்ஜிம–சாமும் வெளியே வநது பாாத்துவிட்டு, அம்மாவிடம போய, "விநோதமான மிருகம ஒனறு நம வீட்டு வாசலில படுததுளளது" எனறனா. வேகமாக வெளியே வநது பார்தத ஜூஸம நாயைக கணடதும தன முடடாள கணவனே இங்ஙனம நாயாக உருமாறி அனுப்பபபட்டுளளான எனபதை உணர்நது கொணடாள. குழநதைகளிடம, "இது உங்கள தகப்பனே" எனறாள் "இது எப்படி எங்களுடைய தகபபனாகும்?" எனறனர். தாய, "நீங்கள எனனை நம்பாவிடில, கொஞசம் எசசிலை உங்கள உள்ளஙகையில் விட்டு நாயிடம நீட்டுங்கள் நாய அதை நககினால அது உஙகள் தநதை இல்லையெனில வேறு எதுவோதான" எனறாள் பிளளைகளும் அவள் கூறியதுபோல செயய நாயும நககியது ஜூஸம, "பாாத்தீாகளா! இது உங்கள தநதையேதான" எனறாள ஜூஸம வியநது போய நின்ற குழநதைகளுக்கு விளககினாள "எனன நடநதது என்றால, என் தநதையிடம தானியம வாங்கச சென்ற உங்கள தந்தை, பாதை மாறிப்போய் நாயாக மாறி நிற்கிறாா. உஙகளுககு இனிமேல் எப்படி சாப்பாடு கொடுக்கப் போகிறேனோ தெரியவில்லை. ஒரே வழிதான உணடு. நானே என தந்தை வீட்டிற்குச் சென்று உங்களுக்குத் தானியம் அனுபபப்போகிறேன. அதை விதைதது அறுவடை செய்து பிழைத்துக கொள்ளுங்கள." எனறாள். தாய தங்களை விட்டுப் பிரியப் போவதாகக் கூறியதும பிளளைகள் அவளைப் போகவிட மறுத்தனா. இரவு சாப்பிட்டதும் பிள்ளைகள் நெருப்பின் கதகதப்பில தூங்க, ஜூஸம தன தந்தையை நாடிச்சென்றாள். தாய சென்றதும் கெட்ட ஆவிகள் காட்டிலிருநது வநது தனியே விடப்பட்ட குழந்தைகளை விழுங்கிவிட வநதன. இதனை கணட நாய ஆவிகளை விரட்டியது. காலையில் கண்விழித்ததும் தாயைக் காணாமல குழந்தைகள் அழுதன. ஒன்றை ஒன்று நோக்கி, "வா, நாம் அம்மாவைத் தேடிப்போகலாம்" என்று கூறிக் கொண்டன. நாய் வழிகாட்டிச் செல்லப் பிள்ளைகள் பின் தொடர்ந்தனர் வழிதெரியும் வரை நாய சென்றது பிறகு நினறுவிட்டது. குழந்தைகள் நடநத களைப்பில் சற்றே ஓய்வு எடுக்க, நாய் தனக்குள், "குழந்தைகள் சற்று நேரம கண்ணயரட்டும. நான போய் சரியான பாதையைக கண்டுபிடித்து வருகிறேன்." எனக்

கூறிக்கொணடு கிளமபியது

காட்டின் கெடட ஆவிகள் திரும்பவும குழந்தைகள் தனியே இருப்பதைப் பார்த்து அவர்களை விழுஙக வந்தன குழநதைகள தம் உயிரைக காபபாறற ஓடின. அவ்வாறு ஓடுமபோது ஒரு கரடி அவர்களைப் பார்த்து, "எனன விஷயம் ? ஏன இப்படி வேகமாக ஓடி வருகிறீர்கள் ?" எனக் கேடடது பிள்ளைகள் விஷயததைக் கூறினர். கரடியும ஆதரவாக, "பயபபடாதீர்கள் குழநதைகளே ! நான உஙகளைக் காப்பாறறுகிறேன்" எனறது பிளளைகளைத தன் முதுகில் ஏறறி ஒரு உயர்ந்த மரததில ஏறியது. உசசிக் கிளை ஒனறில அவாகளை அமர்த்தி விட்டுக் கீழே இறங்கி அடிமரததின படடைகளை உரிதது வழுவழுப் பாக்கியது. பிறகு தன வழியே சென்றது.

கரடி சென்றதும, கெட்ட ஆவிகள திரும்பவும வநது மரததினமீது ஏறிபபார்ததன அடிமரம் வழுவழுப்பாக இருநததால வழுககிவிட்டன. அவைகளால ஏற முடியவில்லை. அடிமரத்தை வேறோடு வெட்டிச சாய்க்க ஆரமபிததன.

பிளளைகள ஆபததை உணர்ந்து; மரத்திடம, "மரமே, நீ விழுமபோது, காடடை அடுத்துத் தெரியும, மரஙகளற்ற பரநத சமவெளியில் விழு" எனறனர் கெடட ஆவிகளோ, "மரமே, நீ எஙகள் காட்டினிடையே இருக்கும மலையில விழு" எனறன மரம குழநதைகளுக்கு உதவ நினைததது. காட்டைததாணடி, சமவெளிககுத் கெட்ட ஆவிகளால் வரமுடியாது என மரத்திறகுத் தெரியும ஆகவே சாயநது சமவெளியில விழுநதது

தற்காலிகப் பாதுகாப்புப பெறறனர் குழநதைகள ஆனாலும தனிமையில் வாடினர் எப்படித தம அனனையிடம செலவது என யோசித்தபோது ஒரு கழுகு பறநது வநது, "எனன விஷயம குழநதைகளே ?" எனக் கேட்டது குழநதைகள விஷயததைக் கூறினா கழுகு, "நான தினமும இறநத உடலகளிலிருநது மனித இரத்தத்தைச சூரியனுக்காக எடுத்துச் செலகிறேன. உஙகளையும் அழைத்துச் செலகிறேன" எனறது குழநதைகளும், "அஙகேதான நாஙகளும போகவேணடும எஙகள அனனை சூரியனின மகளாககும. நீங்கள் போகுமபோது தயவு கூாநது எஙகளையும கூட்டிச செல்வீர்களா ?" எனக கேட்டன. கழுகு, "உஙகள இருவரையும் ஒரே சமயத்தில் ஏறறிச் செலல முடியாது உஙகளில் ஒருவரைத்தான் தாங்கிச செல்ல முடியும" எனறது குழநதைகள் அதறகு உடனபடடன.

சிபஜிம்-சாம் கழுகின் முதுகில ஏற. கழுகு சூரியனின வீடடை அடைநதது. ஜுஸம தன மகளைக் கணடதும பெரு மகிழசசி அடைநதாள் அவளுக்கு ஒரு பெரிய கூடை நிறைய தானியம் கொடுத்துத் தன கூநதலில் நீளமான கயிற்றைக் கட்டி மகளை பூமியில் தன வீட்டின்முன இறககினாள்



சிப்ஜிம்-சாம் வீட்டை அடைந்ததும் கொஞ்சம தானியம் எடுத்து சமைத்தாள். அதிலிருந்து ஒரு வகை பானமும் தயாரித்தாள். தன் சகோதரனுககாகக் காத்திருந்தாள்.

சிப்ஜி-சாவோ தான் இருந்த இடத்திலேயே இருநதான். எங்கும போகப் பயமாக இருந்தது. அப்போது அவனைத் தேடி அலைந்த நாயும் அதனருகில் வநதது. சிப்ஜி சாவோவைப் பார்த்த சந்தோஷத்தில், நாய், அவன் மேல் தாவி விழுந்து, முகத்தை நக்கி, குலைத்து, வாலை ஆட்டி, தன் சந்தோஷத்தைத் தெரிவித்தது. அவனை வீட்டிற்கு வழிகாட்டி அழைத்து வந்தது. வீட்டை அடைநததும் சிப்ஜிம்-சாம தயாரித்த உணவை உண்டு, பானத்தைக் குடித்து மகிழ்ந்தனர்.

# கண்டுபிடிப்புகள்

## வீடு கட்டிய விதம்

மலைவாழ் மக்கள் தம் மூதாதையர்கள் வாழ்ந்த வாழ்வு பற்றி நிறையக் கதைகள் வைத்துள்ளனர். அவர்கள் மூதாதையர் சிலர் குகை வீடுகளில் வாழ்ந்தனராம் சிலர் பறவைகள் போல் மரங்களில் வாழ்நதனர். சிலா புற்கள், இலைகளால சிறு குடிசைகள் கட்டி அதில் வாழநதனா. ஒரிஸாவின் சாரோ இன மக்கள் தம் மூதாதையா பற்றிக் கீழ்க் கண்டவாறு கூறுகின்றனா

இவாகள் முதலில் மரத்தினடியில் வசிததனர். அப்போதெலலாம் இரண்டு அடி உயரமே பெற்று, குறுகிய உருவம் கொண்டிருநதனர். மழைக் காலத்தில் அவர்கள் அதிக சிரமபபடவேண்டி இருநதது. நிலத்தில் குழி தோணடி முயலகள போல வாழ்நதனர். ஆனால் பலத்த மழையில் மண் சரிய, மக்களில் அநேகர் மடிந்து போயினர். ஆகவே ஜனத்தொகை கணிசமாகக் குறைந்து போயிற்று.

வெகு நாட்கள் கழிதது ஐங்குசாரோ எனும் மனிதனுக்கு வீடு கட்ட ஆசை வந்தது. அவன பனை மரத்தின் ஓலைகளால் ஒரு வீடு அமைத்தான். அது ஒரு குடையைப் போன்ற அமைப்பைப் பெற்றது. ஒரு தூணின மேல் வட்டமான கூரை ஒனறைப் பெற்றுச் சுற்றிலும் சுவர்கள் இன்றி இருநதது. இப்படி எழுந்த வீடுகளில்தான் சாரோ இன மக்கள் நெடுங்காலம் வாழ்ந்தனர். இவ்வின மக்கள் இனறும் தம் கோயில்களை இப்படித்தான் அமைக்கின்றனர். பின்னர் மரததாலும், மண்ணாலும் குளிருக்குக் கதகதப்பாக உலர் வீடுகள் கட்டினர். ஒருவருக்கொருவர் ஒத்தாசையாக இருக்க அருகிலேயே வீடுகள் அமைத்து ஒரு கிராமமாக வாழத் தலைப்பட்டனர்.

சிங்போக்கள் வடகிழக்கு இநதியாவில் வாழ்கிறார்கள். இவர்கள் மிருகங்களிடமிருந்து வீடுகட்டப் பழகியது எப்படி எனக் கதைகள் மூலம் கூறுகின்றனர்.

அப்போது மக்கள் குகைக்குள்ளும், மரத்தினடியிலும் வாழ்ந்தனர். அக்காலத்தில் கின்று-லாலிம், கிஞ்சா லாலி-டாம் எனும் இருவர் தமக்கென அழகிய வீடு அமைக்க முடிவு செய்தனர். துரதிருஷ்டவசமாக

எப்படிக் கட்டுவது எனத் தெரியவில்லை. காடு சென்று மிருகங்களிடமிருந்து கற்றுக் கொள்ள முடிவு செயதனர்.

முதலில் எதிர்ப்பட்டது ஒரு யானை. "ஒரு வீடு கட்ட ஆசைப் படுகிறோம். எப்படிக் கட்டுவது என்று சொல்லிக்கொடேன்" எனறனர். யானை, "முதலில் என் கால்கள் போல மிகவும் வலுவான மரத்தூண்கள் செய்யுங்கள்" என்றது.

"அப்புறம்?"

"யாருக்குத் தெரியும்?" என்றது யானை. இரு நண்பர்களும மேலும் நடந்து ஒரு பாம்பைப் பார்த்தனர். "நாஙகள வீடு கட்ட ஆசைப் படுகிறோம். யானை எங்களைத் தன் கால்கள் போல வலுவான பெரிய மரத்தூண்களைச் செய்யச் சொன்னது. அதனபிறகு என்ன செயவது?" என்று கேட்டனர். "என்னைப் போல நீளமாக, ஒல்லியாக ஆனால உறுதியாகக் கம்பம் செய்யுங்கள்" என்றது பாம்பு.

"பிறகு?"

"யாருக்குத் தெரியும்?" என்றது பாமபு மேலும நடந்தனர். இமமுறை ஒரு எருமை மாடு தன் இறந்துபோன கணவனின எலும்புக் கூடு அருகே நின்று கொண்டிருந்தது. பிற மிருகங்கள், தோல, சதையைத் தின்றுவிட, எலும்புக்கூடு மட்டுமே மிஞ்சியது.

"நாங்கள் வீடு கட்டப் போகிறோம். யானை தன கால் போல மரத்தூண்களும், பாமபு தன்னைப் போல நீளமான கழிகளும செயயச் சொல்லின. இவற்றைக் கொண்டு என்ன செயவது" எனறு இரு நண்பர்களும் கேட்டனர். "குறுக்குக் கழி கொணடு இந்த எலும்புக கூடு போலக் கூரை செய்யுங்கள்" என்றது எருமை

"அதன்பின்?"

"யாருக்குத் தெரியும்?" என்றது மாடு. மேலும் நடந்து ஒரு மீனைக் கண்டனர். "நாங்கள் வீடுகட்ட நினைக்கிறோம். யானையிடமிருந்து மரத்தூண்கள் செய்யவும், பாம்பிடமிருந்து நீளக் கழிகள் செய்யவும, எருமையிடமிருந்து இவற்றை அடுக்கும் முறை பறறியும அறிநது கொண்டோம். இப்போது என்ன செய்வது?" என்று கேட்டனா. "என செதில்களைப் பாருங்கள். நிறைய இலைகளை எடுத்துக் கூரைமேல் ஒன்றின் மேல் ஒனறாக எடுத்து அடுக்குங்கள்" என்றது மீன.

இதைக் கேட்டதும் கூரை ஒன்று மனதில உருவாக, எழுநதது அழகிய வீடு!

## சுத்தியலும், குறடும்

இன்டுப்வா எனும் தச்சுத் தொழிலாளி ஒருவன் இருந்தான. இவன மரம் வெட்டக் கூர்மையான கற்களைப் பயன்படுத்தினான. கற்கள்

